[25th April 1960

THE HON. SRI R. VENKATARAMAN : 1,000 ரூபாய் செலவழித்தால் 5 ரூபாய்க்கு மைக்கா எடுப்பது பொருத்தமல்ல. இது கட்டுபடியாகக் கூடியதாக இருந்தால் சர்க்கார் இந்த வேலையை எடுத்துக்கொள்ளுமே தவிர, கொஞ்சம் கொஞ்சம் அங்கங்கே கனிப்பொருள்கள் இருக்கிறதென்ற காரணத்தால் ஜியாலாஜிகல சர்வே எடுக்க முடியாது.

SRI T. T. DANIEL : What is the difficulty in undertaking an economic survey on an all-India basis ? May I know whether the Government will be pleased to conduct a re-survey in the Kanyakumari district in view of the fact that mica is available there and is visible even to the naked eye ? We are able to see with the naked eye the existence of mica in the hilly tracts of the Kanyakumari district.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, what we see with the naked eye is an optical illusion. Very often, when we see such occurrences, we begin to imagine that there are mining deposits. There are priorities which the State Government have fixed for the purpose of undertaking geological survey and I do not think mica has a very high priority.

*Allotment of houses by the City Improvement Trust*

* 799 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) சென்னையில் " City Improvement Trust " மூலமாகக் கட்டப்படும் வீடுகள், கட்டி முடித்து, விளம்பரம் செய்த பிறகு வீடுகளை யார் யாருக்குத் தேவையோ, அதை எழுதிக் கேட்பதற்குப் பதிலாக, விளம்பரத்திற்கு முன்னாலேயே ட்ரஸ்ட் அங்கத்தினர்களின் சிபார்சுகளின் பேரில் ரிஜிஸ்டர் செய்யப்படுவது உண்மையா ?

(ஆ) இப்போது சமீபகாலத்தில் அந்த முறை மாற்றிக்கொள்ளப் பட்டதா ?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) No, Sir. Allotments of houses are made by the Trust only with reference to the applications received in response to advertisements in the press.

The selection of allottees from the applications received for allotment of houses is made by the Chairman and the Trustees jointly and individually.

(*b*) Does not arise.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், பத்திரிகைகளில் விளம்பரம் எத்தனை தினங்களுக்கு முன்பு செய்யப்படுகிறது என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : எந்தத் தேதியிலிருந்து என்று சொன்னால் எத்தனை தினங்களுக்கு முன்னால் என்று சொல்ல முடியும்.

SRI V. K. KOTHANDARAMAN : வீடுகள் யார் யாருக்கு அலாட்மெண்ட் செய்யவேண்டுமென்று இருக்கிறது ? விளம்பரம் செய்யப்பட்ட தேதிக்குப் பிறகு யார் யாருக்கு விடவேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறது ? எந்தத் தேதியிலிருந்து எத்தனை தினங்களுக்கு காலம் கொடுக்கப்படுகிறது ?

25th April 1960]

**THE HON. SRI R. VENKATARAMAN**: கனம் அங்கத்தினர் அவர்கள் இது சம்பந்தமான ப்ரொஸீஜரை சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. முதலில் ஸ்கீம் போடப்படுகிறது. அந்த இடத்தில் வீடுகள் கட்டுவதற்கு நிலம் ஆர்ஜிதம் செய்த பிறகு மனைகள் எல்லாம் பிரிக்கப்பட வேண்டும். அதன் பிறகு ப்ளூ பிரிண்ட் எடுக்கப்படுகிறது. எடுத்த பிறகு எந்தவித மான மனைகள் கிடைக்கும் அதற்கு வேண்டிய மனு கொடுக்கலாம் என்று அச்சடித்த புஸ்தகம் ஒன்றை இரண்டு ரூபாய்க்கு விற்கிறார்கள். அந்தப் புஸ்தகத்திலுள்ள குறிப்புகள் பிரகாரம் மனுக்கள் போடவேண்டும். தனக்குச் சொந்தமாகவோ அல்லது உறவினருக்கோ வீடு இருக்கக் கூடாது. அந்த விதமான தகுதி உடையவர்கள் அப்ளிகேஷன் போட வேண்டும். அத் துடன் 100 ரூபாய் பணம் கட்டுவதற்கு தேதி குறிப்பிட்டிருப்பார்கள். பணம் கட்டிய பிறகு மனுவைக் கொடுக்க வேண்டும். அதன் பிறகு டிரஸ்ட் தகுதியுள்ளவர்களைத் தேர்ந்தெடுக்கும். சி.ஐ.டி. ஒரு அடானமஸ் பாடி. இது முடிவு செய்வது நியாயமாக இருக்கும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

**SRI K. VINAYAKAM**: Sir, is it not an erroneous conception that buildings are given away for the mere asking by some individuals to some other individuals—by either the Chairman of the City Improvement Trust or the Trustees—by private negotiation? Is it also not a fact that sites or houses are allotted only on the basis of the needs of the applicants and they are given only to those who deserve the same and who do not possess a house or plot in the City of Madras and on verifying the fact whether the income of the applicant was adequate enough to pay back the rates fixed by the Trust? Is it not a fact that all these formalities are regularly and properly observed?

**THE HON. SRI R. VENKATARAMAN**: Sir, that is exactly what I said just now. The hon. Member has given some additional information.

**SRI M. K. SOMASUNDARAM**: 1959-ம் வருஷத்திலே எத்தனை அப்ளிகேஷன் வரப்பெற்றது? எத்தனை பேருக்கு அல்லாட்மெண்ட் கொடுக்கப்பட்டது? மொத்தத் தொகை என்ன?

**THE HON. SRI R. VENKATARAMAN**: 2,000, 3,000 வீடுகளுக்கு அப்ளிகேஷன் கொடுத்திருந்தார்கள். ஒன்றுக்கு 10 மடங்கு அப்ளிகேஷன்கள் வந்திருந்தன.

**SRI V. K. KOTHANDARAMAN**: குறிப்பிட்ட நபர் பேரிலோ அல்லது குடும்பத்தில் உள்ளவர்கள் பேரிலோ ஒன்றுக்கு மேற்பட்ட வீடுகள் கட்டுகிறார்களே அப்படி கட்டப்பட்டு வாங்கியிருக்கக்கூடிய வீடுகள் வாடகைக்கு விடப்படுவது உண்மையா?

**THE HON. SRI R. VENKATARAMAN**: விதிகள் பிரகாரம் அப்படிக் கட்ட முடியாது. யாராவது ஏமாற்றியிருக்கலாம். யாருக்கும் நாம் முன்பு சொன்னதுபோல் எக்ஸ்ரே வைத்துப் பார்ப்பது கிடையாது. அப்ளிகேஷனில் அவர்கள் என்ன தகவல் கொடுக்கிறார்களோ அதை வைத்துத்தான் முடிவு செய்ய வேண்டியிருக்கிறது. விதிகளின்படி கொடுக்க முடியாது என்பதைத்தான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

**SRI V. K. RAMASWAMY MUDALIYAR**: In view of the fact that heavy congestion is caused by the allotment of so many houses, and sites to private individuals, in view of the fact that scarcity conditions prevail and also in view of the fact that there is such a large demand for the houses from the public, may I know whether there is any proposal to acquire some more areas in the suburbs and allot the same to the large number of applicants?

[25th April 1960

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, we are now thinking of developing two neighbourhoods on the type of Thyagarayanagar which was developed some thirty years ago. One is in West Madras area between the Avadi Road-Integral Coach Factory and the Poonamallee High Road. That would be 1,000 to 1,200 acres. There is another neighbourhood which we want to develop and that is in North Madras, Vyasarpadi, where also we have acquired about 1,000 acres. When these two suburban townships come up, there may be some relief to the congestion in the city.

SRI A. VEDARATHNAM : வீடுகளுக்கு விண்ணப்பம் செய்கிறவர்கள் தங்களுக்கோ, உறவினர்களுக்கோ வீடுகள் இருப்பது கூடாது என்பதாக கனம் அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். உறவினர்களுக்கு வீடு இருப்பது தவறு? அவர்களுக்கு இடம் இல்லை என்ற காரணத்தால் விண்ணப்பம் செய்கிறார்கள். இதைக் கனம் அமைச்சர் அவர்கள் விளக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : நெருங்கிய உறவினர் அதாவது கணவன் மனைவி, தகப்பனார், பிள்ளையாகவோ இருந்தால் சாதாரணமாகக் கொடுப்பதில்லை.

*Houses for the employees of the Nellikuppam Sugar-Factory*

*800 *Q.*—SRI S. THANGAVELU : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) நெல்லிக்குப்பம் சர்க்கரை ஆலையில் வேலை செய்துவரும் ஆலைத் தொழிலாளர்களுக்கு கூட்டுறவு முறையில் வீடு கட்டும் திட்டம் ஏதேனும் இருக்கிறதா ?

(ஆ) அப்படியானால் எப்போது எடுத்துக்கொள்ளப்படும் ?

(இ) இல்லை என்றால், அதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*), (*b*) & (*c*) The workers of the East India Distilleries and Sugar Factory, Nellikuppam, organized a Co-operative Housing Society for the construction of houses for the workers under the Subsidised Industrial Housing Scheme. The Society formulated a project for the construction of houses at a cost of Rs. 6,300 each against the ceiling limit of Rs. 3,850 fixed by the Government of India. The project was dropped eventually, as it was not possible for the Society to construct houses within the ceiling cost, and for the workers to meet the extra cost.

MR. SPEAKER : இந்த நேரத்தில் ஒன்று சொல்ல வேண்டும். கேள்வி கேட்க விரும்பினால் இடத்தில் எழுந்து நின்று. கேள்வி போடுகிறேன் என்று சொல்ல வேண்டும். சும்மா இடத்தில் உட்கார்ந்து இருந்தாலோ அல்லது சபையை விட்டு வெளியே சென்றுவிட்டாலோ அவர் கேள்வி போட விரும்பவில்லை என்றுதான் எண்ணிக்கொள்ளக் கூடும்.

SRI S. THANGAVELU : அமைச்சர் அவர்கள் தயவு செய்து மேற்கூறிய பதிலைத் தமிழில் சொல்ல வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : நெல்லிக்குப்பம் சர்க்கரை ஆலையைச் சேர்ந்த தொழிலாளர்களுக்கு வீடு கட்டுவதற்கு ஒரு கோவாப்ரேடிவ் ஹவுசிங் சொசைடியை அமைத்து முயற்சி எடுத்துக்கொண்டார்கள். அவர்கள் போட்ட திட்டப்படி வீடு ஒன்றுக்கு 6,300 ரூபாய் செலவு ஆயிற்று. ஆனால் இந்திய சர்க்காரால் நிர்ணயிக்கப்பட்டு இருப்பது வீடு ஒன்றுக்கு 3,850 ரூபாய்தான். ஆகவே இதற்கு மேல் பணம் வேண்டி இருந்த காரணத்தினால் அவர்கள் அத்திட்டத்தைக் கைவிட்டுவிட்டார்கள்.